சிமையவர்கணமுனி கணமூட னினிதுப்ர பஞ்சமி
றைஞ்சுங் கீர்த்திதுரங்கந், திறல்வாரணம் ... *
இருவினைகெடவொருநிரமயபரமவுனந்தருமின்மைக்
கேக்கியவன்பின், சிவலோகமே. (க)

சிவலோகவகுப்பு - முற்றிற்று



பத்தொன்பதாவது

## மயில்வகுப்பு.

தானதன தந்ததன தானதன தந்ததன தானதனத
ந்ததன தந்ததனன ... ... ... ... *
ஆதவனுமம்புலியு மாசுறவிழுங்கியுமி ழாலமருவும்
ஙிரி யி,ரண்டுமெழுதே ... ... ... *
ஆறுமுகனைந்துமுக ஞானமுகனெங்கட்வுளாமென
மொழிந்தகல, வென்றவிடுமே ... ... *
ஆர்கலிகடைந்தமுது வானவர்ருந்தவரு ளாதிபகவ
ன்றுயில, னந்தன்மணிசேர் ... ... ...*
ஆயிரமிருந்தலைகளாய்விரிபணங்குருதியாக முழுது
ங்குலைய, வந்தறையுமே. ... ... (வ)
வேதமுழுதும்புகலி ராமனொருதம்பிமிசை வீடண
னருந்தமையன், மைந்தனிகலாய் ... ... *
வீசுமரவஞ்சிதறி யோடவருவெங்கலுழன்மே லிடி
யெனும்படிமு, ழங்கிவிழுமே ... ... *

மேகிளிசுமந்தபெரு மாகண்மயங்கநகமேவுசரணங்
கொடுல, கெங்குமுழுமெ ... ... .. *
வேலியெனவெண்டிசையில் வாழுமுரகந்தளர வே
யழலெனுஞ்சினமு, டன்யடருமே ... ... *
போதினி லிருந்தகலை மாதினை மணந்தவுயர் போத
னையிரந்துமலர், கொண்டுமுறையே ... ... *
பூசனைபுரிந்துகொடியாகிமகிழொன்றதுகிர் போன
முடிவிளங்கவரு, மஞ்சமடுமே ... ... *
யூகரொடுகந்தருவர் நாகரொடு கிம்புருடர் பூரணக
ணங்களொடு, வந்துதொழவே. ... ...
போரிடுவவென்றுவெகு வாரணகணங்களுயிர்போ
யிலமெனும்படியெ, திர்ந்துவிழுமே ... (௯)
கோதகலுமைந்து மலர் வாளிமதனன் பொருவில்
கோலவுடலங்கருகி, வெந்துவிழவே ... *
கோபமொடுகண்டவிழி நாதரணியும்பணிகள் கூடி
மனமஞ்சிவளை, சென்றுபுகவே ... *
கூவியிரவந்தருணர் வாழியெனநின்றுபொரு கோ
ழியொடுவென்றிமுறை, யும்பகருமே ... *
கோலமுறுசெந்தினகர் மேவுகுமரன் சரண கோக
னகமன்பொடுவணங்குமயிலே. (௧௦)

மயில்வகுப்பு முற்றிற்று.





இருபதாவது

# கொலு வகுப்பு.

தனதன தனதன தனதன தனதன, தனந்த தனனா
தனந்த தனனா ... ... ... *
அருமறையவன்முதலரியரன்மகபதி,யனங்கனிமை
யோரினங்களொருபால் ... ... ... *
அருணனுமதியமு மனலெழுகனலியு, மணங்கினொ
டுசூழ் கணங்களொருபால் ... ... ... (வ)
வருணனு நிருதியும் வழியொடுதனதனு, மகிழ்ந்து
மிகவே புகழ்ந்ததொருபால் ... ... ...*
வயிரவரொடுபட ருவணருமுரகரும், வரங்கள் பெ
றவே யிரங்கவொருபால் ... ... ...(௨)
இருடிகளெவர்களு மினியகினரர்களு. மிணங்கியெ
திரே வணங்கவொருபால் ... ... ... *
இபமுகவனுமெழி விளவல்களனைவரு, மியன்றநெ
றியே முயன்றதொருபால் ... ... (ஒ)
உருமலிகுறவினமொடுவசுமுசுமுக, னுறைந்துபரி
வாய் நிறைந்ததொருபால் ... ... ... *
உடுவொடுகடவுப னிருவருமுறைமுறை, யுகந்து
தொழவே மிகுந்ததொருபால் ... ... (க)
அடல்விடைமுகனரைகதையுறவெகுசன, மதுங்கி
யருகேயொதுங்கவொருபால் ... ... *
அயன்முடிதிருகிய வயவனுமியமமொ, டடங்கிவல

மேதொடங்கவொருபால் ... ... (௬௳

மடல்புனைபுகரொடு வருபதிரெருவரு, மருங்கினு
றவே நெருங்கவொருபால ... ... ... *

மருவொடுதுவரிரு வருமிசைவலமொடு, வசிந்துமா
ணமேசசிந்ததொருபால் ... ... (௬௯)

மிடவிறைவிறலரி விமலர்களருள்சுதன், வியந்துவி
னைவாய் நயந்ததொருபால் ... ... *

வெயில்விரிசுடரவன் மகனொடுமதிமகன்விளம்புமு
றையேகிளம்பவொருபால் ...... (௬௱)

உடலொளிமவுனிக ளொடனுபணிடசுரு, முளங்குளி
ரவே விளங்கவொருபால ... ...

உமைதிருமகணில மகள்சுலைமகளொடு, முகந்தெவ
ருமே தொகுத்ததொருபால்... ... ...(௨)

அதிபகிரதிபயி ரவிபகவதிசசி, யரம்பையருமே நிர
ம்பவொருபால் ... ... ... *

அழகியகவுரியொ டிலகியவலவையு, மடைந்துதய
வாய் மிடைந்ததொருபால்... ... ...(௨௳)

மதியரசருநிறை வசியரும்விளைஞரு, மலிந்துமுக
மே பொலிந்ததொருபால் ... ... ...*

வருசிவனடியவ ராகரவெனமுறை, வழங்குகடல்
போன் முழங்கவொருபால் ... ... (௨௯)

விதிமுறைகருதியை வகைபுரிகருவிகள், விளைந்த
வொலிவா னளைந்ததொருபால் ... ...*

விதமுடனபினய வனிதையர்சதிமுறை, விரிந்தநட
மே புரிந்ததொருபால் ... ... (உ௯)
உதிர்தருமலர்விரை யுறுபுகைமிர்கமத, முமிழ்ந்தம
ணமே கமழ்ந்ததொருபால் ... ... *
ஒழுகியகிரிதொடு பணிதமதடுசுட, ருவந்தவொளி
யே நிவந்ததொருபால ... ... (௩)
அரியசடெனமுக டளவியவொருகுடை, யமர்ந்தநி
ழலே சமைந்ததொருபால் ... ... *
அருமடவனமென விருபுடைகவரிக, ளசைந்தவழ
கேயிசைந்ததொருபால ... ... (௩௧)
வரிசைசெய்துயிலொடு வனமயில்சிவிரியின், வயஙு
குசிறுகா லியங்கவொருபால் ... ... *
மறுகடலினிலெழு நிறைமதியமுதென, வரிந்துப
னிநீர் சொரிந்ததொருபால ... ....(௩௨)
விரியிருள்வலிதரு கிரணமதெனநல, மிகுஞ்சுழலில்
வீசுகுஞ்சமொருபால் ... ... *
வியன்மரகதமணி மிளிர்தருகளசெதிர், விரைந்துநி
ரையாய் நிரைந்ததொருபால் ... (௩௩)
உரியவெளிலையுட னுயரியகமுகினி, லுகுந்தகனியே
பகுந்ததொருபால்... ... ... ...*
உலகுளவனிதைய ரவரவர்விரதமொ, டுணர்ந்துக
னியே கொணர்ந்ததொருபால் ... ...(௪)
அறுகதிரவனென வறுமணிமவளிக [illegible]

லே படர்ந்ததொருபால் ... ...

அறுமதியெனவறு திருமுகசததள, வலர்ந்தமலரே மலர்ந்ததொருபால் ... ... ...(௬௮)

மறுவறுகடலெனவருவுபனிருவிழி, வழிந்தவருளே பொழிந்ததொருபால்... ... ... ...*

வணிதருமகரமுமணியணிபணிகளும்,வயங்குகுழை யே தயங்கவொருபால் ... ... ...(௬௯)

இறுகுபொனமலையொடு மிடறுபனிருபுய, மிசைந் துநெடுவா ளசைந்ததொருபால்

எழிலியையனையப னிருகையிலதன்முத, லிலங்குப டையே துலங்கவொருபால்... ... ...(௬௭)

உறுவரையருவியை நிகர்தருமுரமிசை, யுடன்கொ ள்புரிநூல் கிடந்ததொருபால் ... ... *

உருமெனவிகலிமு னெதிர்பொருமவுணரு, ளுடை ந்தவுடைவாள் சிறந்ததொருபால். ... ...(௫)

அனவரதமுமறைமுறையிடுபரிபுர, மலங்குமிருதா ள் குலுங்கவொருபால் ... ... *

அளவறுகலவியின் முழுகியகுறமக, ளமர்ந்துளொ யிலாய் கிமிர்ந்ததொருபால் ... ...(௫௪)

வனதருவினிலுறை சதமகனருண்மகள், வதிந்துமண மே பொதிந்ததொருபால் ... ... *

வருமடியவரிடம் வலியசனதம்வர, வளர்ந்தசபை யே கிளர்ந்ததொருபால் ... ... (௫௨)

நினைவொடுபணிபவர் வினைதுகள்படவெதிர், நினை
நுபிருநீ றணிந்தவொருபால் ... ... *
நிறைமலரொடுநல கலவையுமுயர்குரு, நினைந்துத
ரவேபுனைந்தவொருபால் ... ... (ருஒ)
தினகரனுலவுச னிதியினிலிரவலர், தெளிந்ததமி
ழே பொழிந்தவொருபால் ... ... ...*
சிவபரகிரியினி லொருசிவன்வடிவொடு, திருந்தமு
ருகோ னிருந்தகொலுவே... ... ... (கூ)

கொலுவகுப்பு-மூற்றிற்று.

இருபத்தொன்றாவது

## வீரவாள்வகுப்பு

தானனா தத்ததன தானனா தத்ததன தானனா தத்த
தன தந்தனத் தனன .. ... *
பூவுளோனுக்குமுயர் தேவர்கோனுக்குமெழு பூமி
யாவர்கதும்வரு துன்புதீர்த்திடுமே ... .. *
பூதசேனைக்குளொரு கோடிசூர்யப்பிரபை, போல
மாயக்கரிய கங்குனீக்கிடுமே... ... ... *
பூகிபூசிப்பரமர் தோலைமேலிட்டதொரு, போர்வை
போனெட்டுறை மருங்குசேர்க்கிடுமே ... ...*
போரிலேசிர்த்தமிடு வீரமாலக்ஷ்மிமகிழ், பூசைசே
சித்துமலர் தும்பைசாத்திடுமே... ... *

பாவரூ க்கொடிய சூரனார்பெற்றபல, பாலர்மாளத்
தசைக ளுண்டுதேக்கிடுமே

பானுகோபப்பனைனன் மேனிசோரக்குருதி, பாய
வேவெட்டியிரு துண்டமாகிடுமே

பாடுசேருந்தகள மீதிலேசுற்றுநரி, பாறுபேய்துய்
த்திட நிணங்களூட்டிடுமே

பாடியாடிப்பொருத போரிலேபத்திரகா, பாலிசூலப்
படையை வென்றுதாக்கிடுமே

ஆவலாகத்துதிசெய் பாவலோர்மெய்க்கலிக, ளாம
கோரக்கலேக ளைந்துநீக்கிடுமே

யாருமேயற்றவனென் மீதொராபத்துறவ, ராமலே
சுற்றிலுமிருந்து காத்திடுமே

ஆடலவேணம்படைக ளானையாவுக்குமுத, லானை
யாளைவந்துவலம் வந்துபோற்றிடுமே

ஆலகாலத்தைநிகர் காலசூலத்தையும, ருதபாசத்
தையு மரிந்துபோட்டிடுமே

மேவலார்முப்புரமு நீறவேசுட்டவொரு, மேருவா
ம்விற்பரமார்த்தபாக்கியவான்

வேடர்மானுக்குமுயர் தேவயானைக்குமிசை, வேல
ர்தாளைத்தொழுதுயர்ந்தவாழ்க்கையினன்

வீறுசேர்மிக்ககண நாதனொட்டுவகை, வீரர்கேய
த்தமைய னென்றதோட்டிலேவன்

மேன்மையாம்லக்ஷாத வீரர்பூசிக்கவரு, வீரவாகு
த்தலைவன் வென்றவாட்படையே

வீரவாள்வகுப்பு-முற்றிற்று.



## இருபத்திரண்டாவது

# சிவகிரிவகுப்பு



தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்த தத்
த தத்த தத்த தத்த தனதானன

மெத்தமெத்த வக்ரமத்தின் மெத்தமெத்த விக்ரம
த்தின் மெத்தமெத்த வுக்ரவெற்றி, மிகுபரசமே ()
விட்டுவிட்டு றுக்குறுக்கு கட்டுகட்டு குத்துகுத்து
வெட்டுவெட் டெனச்சினத்து, நமனுடியே (வ)
சத்தமிடட கட்டிகெட் டெயிற்றினைக்கடித்துறுக்கு
தர்க்கமிட் டெனைப்பிடிக்க, வருபோதிலே ()
தத்தளிக்கும்புத்தியைத் திடப்படுத்தி யொத்திடத்
தணிப்புறுத்தி மெய்த்துணைக்கு, வரவேணுமே (௨)
எத்தலத்துமெப்பதிக்கு மெப்படிக்குமெச்சரித்தா
ர்ப்பதத்தையுச்சரிக்கு, நினைவாகியே ()
இட்டம்வைத்தவர்க்கனுக்ர கச்சமுத்ரவித்தையிப்ர
சித்தநித்யமுத்தமிழ்க்கு, மருள்போதனே (௩)
அத்ரபத்ரசித்ரமிட் டயிற்படைத்தயிற்கிணைத் தலர்
க்கணுற்ற டோற்குறத்தி, மணவாளனே
அத்தனுக்குமைக்கிதத்த புத்ரசித்திமுத்தியைச் செ
யற்புதச்சிவக்கிரிக்குண், முருகேசனே ... (க)

சிவகிரிவகுப்பு-முற்றிற்று.



இருபத்துமூன்றாவது

# திருச்செந்தில்வகுப்பு.

தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த தந்த
தந்த தந்த தந்த, தனதானன

சந்தபந்தமூந்துவிந்தை செஞ்சொலின்ப யந்தநந்
து சங்கமங்கலம்பொருந்து, தமிழ்பாடியே ()

தஞ்சமென்று சென்றுசென்று நஞ்சுவிஞ்சுநெஞ்ச
வஞ்சர்தங்கண்முன்புநின்றுநின்று,மெலிவோதியே(வ)

சிந்தைநொந்து நொந்துநைந்து நைந்துவெம்பி வெ
ம்பி யங்கிசிந்தியிந்தவெங்குடம்பை யழிபோதுமா ()

சிங்கமுன்புகுந்ததந்தி யின்குலங்கலங்குபண் பொ
சிந்தநுன்மேலெழுந்து, கனையேறுவேன் (உ)

அந்தரங்களண்டரண்ட மண்டலங்குலுங்கநின் ற
சைந்தசைந்துபங்தெழும்ப, வசுராதியோர் (

அங்கடங்கடுண்டதுண்டகண்டபந்திசண்டை வந்த
லைந்துருண்டுமண்டைசிந்த, வடர்கோபனே ()

கந்தசந்தநுங்குகும்பகொங்கையிந்திரன் மடந்தைக
ங்கணம்புரந்தவென்றி, யணிநேயனே ... ()

கம்புமஞ்சமூந்திகழ்ந்திருந்திடுந்திறஞ் செறிந்துகஞ்
சநன்றலர்ந்தசெந்தின், முருகேசனே. (க)

திருச்செந்தில்வகுப்பு - முற்றிற்று.



## இருபத்துநான்காவது

# திருப்பழனிவகுப்பு.



தந்தனனதந்தனன தந்தனன தந்தனன தந்தனன
தந்தனன தந்தனன தந்தனன தந்தனன தந்தனனதந்
தனனதந்தனன, தனதானன

எந்தவினையும்பவமுமெந்தவிடமும்படரு மெந்தவி
கலும்பழியுமெந்தவழுவும்பிணியுமெந்தவிகழ்வுங்கொ
டியவெந்தவசியுஞ்சிறிது, மணுகாமலே ()

எந்தவிரவுந்தனிமையெந்தவழியும்புகுத வெந்த வி
டமுஞ்சபையிலெந்தமுகமும்புகலு மெந்த மொழியுந்
தமிழுமெந்தவிசையும்பெருமை, சிதறாமலே (வ)

வந்தனைசெய்துன்சரணநம்புதல் புரிந்தவருள்வந்த
னுதினந்தனிலு நெஞ்சினினைவின்படிவரந்தரவு வந்த
ருளிதம் பெறுவதன்றிநெடு, வல்வீசியே ()

வஞ்சவிழிசண்டனுறுகின்ற பொழுதுங் குமரகந்த
வெனநன்கறையவுந்தெளிவுத்துயிர் வருந்துபய முந்
தனிமையுந்தவிரவஞ்சலெனவரவேணுமே

தந்தனன தந்தனன டிண்டிகுடி டிண்டிகுடி குண்டமடகுண்டமட மண்டமென நின்றுமுரசந்திமிலை பம்பைதுடிதிண்டிமருமுழங்குமொலி, திசைவீறவே ()

தண்டவமார்மண்டசுரர்மண்டைநிண மென்றலகையுண்டுமிழ்தல்கண்டமாரிந்திரன்வணாகுபதகண்டை சிறுகிண்கிணிபுலமபிடவரும்பவுனி,மயிலவாகன ()

செந்தனிமைமுந்துபடமென்றுள மருண்டுநிறைசநதனவனங்குலவுமநதிகுதி கொண்ட யல செறிநககமுகின்புடை பதுங்கிடவளேந்துமிமி, மடல்சாடவே ()

சிந்தியவரம்பையலவின் கனியிலவந்துவிழ மெனகனியுண்டந்தகளேவிண்டநறை கொண்டுசிறு சென்பகவனங்கள்வளர்தென்பழனியம்பதியின, முருகேசனே

பழனிவகுப்பு - முற்றிற்று



இருபத்தைந்தாவது

## திருப்பரங்கிரிவகுப்பு.



தானதந்தன தானதந்தன தானதந்தன தானதந்தன இப்படி இரண்டு தனதானன

சாதியுங்குலமாவதுங்குடியாவதுஞ்சன்மாவதுங்கி
ளைதார முந்திரபாலரும்பிர தானமும்பெருகாண்மை
யும்பெறுதான மும்பகுமானமுஞ் சிவஞானமும் பல
கோலமும்புரி, தொழிலோடுமே

தாழ்வகன்றிடுவாழ்வுமெம்பிணி நோயுமங்கதிலா
துாகதனிலாவதுந்தளாசா வொழிந்திடு யோகமுஞ்சி
வமேவுறுமெந்த நிதானமுஞ்செய் தராசுகண்டறுபோல்
வரும்பொதுவாகுமென்றுன; திருதாளையே (௮)

ஓதிநெஞ்சயரார்தினந்திரிகாலமுந் தொழுவோர் வி
திமபியதேது மனபுடனே தருயகாவையாகவந் தனுபூ
திகந்துமுழுவல்கடந்திடவேபுரந்தருள் கருமிங்கிதசே
வைகம்பிட,படிகாணவே

ஓசைவந்தனையாய் வணங்கியவேழை சிந்தையுமோ
கினைந்திடுவேளைவந்தினிதாய்வரந் தரவேறுமென்றன்
மேவருந்திபுமோதிமன்றினைநாளிளம் புதனியறிந்து
மிதேனிரங்கிலை, யறிவேலையா (௯)

ஆதியாந்தமறுத்தெவர்க்குவு நாதமும்பிரியாதிறைந்தவ
ருபவினப சொருபசுந்தர சோதியின்பொலிவே நீதியம்
பொருளாகநின்றபராபரன்கருத்தலயன்புலவோரிறை

தாடவின்செக சேகிணங்கிண் சேகுடண்ட மடாட
மண்டம் தாகிணங்கிண தோதிணங்கிண தாதிமிந்திமி
தோவெனுந்தொனியார்சிலம்பொலிதாளமிஞ்சிடவே
நடம்புரிபாதநம்பர, னருளபாலனே

மாதிரந்திசை யாகவங்கிகடலு சலந்திரைமா சலம்பு
விமாகமண்ட[illegible]ன் மெய்ருவினறலை யே
குலுங்கிடவாச மொன்றிய கால்பொருந்துகள் வானி
ரம்பிடவேவருங்கதிர், வடிவேலனே.

வாஷரங்கதிர் தாவுதண்டலை மேவுகொண்டலையூடு
நின்றலேயுமினங்களி கூறுநண்பொடுகோகனகஞ் செ
றிபாலவநதிசமு பேரசிறந்திரு மூவர்விஞ்சையர் சூழ்
பரங்கிரி, முருகேசனே ... ... (௧)

திருப்பரங்கிரிவகுப்பு முற்றிற்று

[illegible] வகுப்பு - உரு.



Piramutha.

வெளியீடு எண். 524

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு



ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

தருமையாதீனம்

உ

குருபாதம்

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய
சுவாமிகள்

குருபூசைத் திருநாள் மலராக

வெளியிடப்பெற்றது.

1—6—64

வெளியீடு எண். 524.

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்
25-ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள் அவர்கள்

அருளாணைப்படி வெளியிடப்பெற்றது.

தருமையாதீனம்
1964.

உ

குருபாதம்

# நான்முகம்

குருவருள் பெருகினால் உண்மை இன்பம் உண்டாகும். அவ்வின்பமே பேரனுபவம் உண்டாக்குமெ பெற்றி உடையது. அத்தகைய அனுபூதிமான்கள் அருள் வரலாறும் அருள் வாக்குக்களும் நம்மை வாழ்விப்பன. அவற்றைக் கூர்ந்துநோக்கி, மெய்யறிவு பெறுதல் வேண்டும்.

இத் தருமையாதீனத்தை நிறுவியருளிய ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளின் குருபூசை நாளாகிய இன்று (1—6—64) அவ்வருளாளரின் அருள் வரலாறு அன்பர் உலகு பெற மலர்கின்றது.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானமவர்களின் அருளாணைவழி வெளிவரும் இதனைப் பெற்றுக் கற்று இருமைப் பயனும் உலகு எய்துக,



உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் தோத்திரம்

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்தி டாமல்
தாரணிஅன் பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடியபொழிற் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும்இரு கடைக்க ணாளன்
பார்புகழும் ஞானசம்பந்தன் எந்தை
பரமன்இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

—ஸ்ரீ சம்பந்தசரணாலயர்.

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள் வரலாறு

ஆலந் தரித்தலிங்கம் ஆலவாய்ச் சொக்கலிங்கம்
மூலமாய் எங்கும் முளைத்தலிங்கம்—பாலொளியாம்
மத்தனே கூடல் மதுராபுரி உமையாள்
அத்தனே ஆலவா யா. —குருஞானசம்பந்தர்.

## கோயில் மணி ஒலித்தது

சற்றேறக்குறைய ஐந்நூறு ஆண்டுகளுக்கு முந்தியகாலம். மரங்களும், செடிகளும், புதர்களுமாக மண்டிக்கிடக்கும் பெருங்காடு அது. எங்கும்

ஓசை மரச்செறிவு. சிள வண்டின ரீங்காரம செவி
யைச செவிடாககிவிடும போலிருககிறது. வன விலங
குகள ஓடித திரிகின்றன. கொடிய விலங்குகள குமுறு
கின்ற பகுதி. காட்டின இடையில காவிரி பாய
கின்றாள். எங்கும அமைதி குடிகொண்டிருக்கும
அந்தக காடு மயிலாடுதுறைககுக கிழககே இருககும
காடு காவிரிககரையில அமைந்த அககாட்டுப
பகுதியில கோயிலமணி ஒலிககின்றது. மங்கல வாத்தி
யங்கள முழங்குகின்றன கற்பூர மணம பரவுகிறது
பிரணவ நாதம காற்றிலே மிதநது வருகிறது. ஆம,
எங்கும தெய்வமணம அறவுருவமாக விளங்கும
தருமபுரீசா சிவலிங்கவடிவில வில்வமரத்தினடியில
வீற்றிருககிறார். சுற்றிலும சில முனிவாகள மோனத
தவமிருக்கும சிவஞானககாட்சி. அகத்திய முனிவா
தாமபுரீசரின தண திருவடிகளை மலரிட்டு விருமபி
நல விளககுத தூபம விதியினலை இட்டு வழிபடுக்

கொண்டிருக்கிறார். அந்தப் பூசையிலிருந்து வெளிப் படும் அருள் வெளிப்பாடே அக்கானகம் முழுதும் மணக்கிறது.

## திருவருள் ஆட்சி :

ஒருநாள் அகத்திய முனிவரின் சீடர்கள்முன் ஓர் இளந்துறவிவந்து பெருமானை வழிபடுகிறார். அகத்திய முனிவரின் சீடர்களது இதழ்கள் குறுமுறுவல் புரி கின்றன. விழி மலர்கிறது. தம் திருக்கரத்தால் அப் புதிய துறவியாரை வாழ்த்துகிறார். இந்தக் காலத் தைத் தானே அவர் எதிர்நோக்கி யிருந்தார்! அகத்திய முனிவர் அருள் வெளிப்பாட்டால் அப்புதிய துறவுச்செல்வர் அங்கே அமர்கிறார். அவரது வழி நிற்கும்சீடர்கள் பெருகுகின்றனர். அவர் தம்அருளாட்சி அக்கானகமெங்கும் பரவுகிறது. காவிரிக் கரையிலே

அருட்செல்வம புது மலர்ச்சியோடு திருவீறறிருக்கிறது. கானகமெல்லாம் ஞானசமபந்தம் பெற்றுத் துலங்குகின்றன. தருமபுரீசர் திருவருள் அங்கிருந்து வையகமெல்லாம பொங்கி வழிகிறது.

எங்கும திருவருள் ! எங்கும் குருவருள்! அகத்திய முனிவரின் சீடர்கள் ஆனநதமடைகின்றனர். பலப்பல சித்திகளை உபதேசித்து ஆட்சியை அவவருளாளரிடம ஓபபடைததுத் தம் இருப்பிடம செலகின்றனர்.

புலியும பசுவும ஒரு துறையில நீர் உண்டு காவிரிச் சோலையில் களித்து விளையாடுகின்றன. கொல்லுங் குணமுடைய விலங்குகள் அனைத்தும் கொடுமை தவிர்த்து அருட்குணம் அடைகின்றன. உலகம காணாத புதுமை, தருமபுரீசர் அருணிழலில் காவிரிக்

கரைக் கானகத்திலே. இதுவன்றோ திருவருள் திறம் என்று தேவரும் யாவரும் வியந்து நிற்கின்றனர்.

இந்த அருளாளர் யார்? ஞானச் செல்வத்தால் அஃறிணை உயிர்களையும் அன்புலகுக்கு அழைத்துச் சென்று பெருமான் திருவடி இன்ப வெள்ளத்துள் திளைக்கச்செய்த இத்திருவுடைய பெருமகனார் யார்? அகத்திய முனிவரின் சீடர்களாலும் வியக்கப்பெற்ற இவ் வித்தகர் யார்? தம் திருவருள் தேக்கத்தால் உலகை அன்புமயமாக்கிய இவ்வனுபவச்செல்வர் யார்?

**சொக்கநாதர் திருமுன் :**

சீவில்லிபுத்தூரிலே சுப்பிரமணிய பிள்ளை என்ற சிவநேசச்செல்வருக்கு மீனாட்சியம்மை என்ற மெல்லியலார் திருவயிற்றிலே சோமவாரத்தன்று அவதரித்தது

ஒரு குழந்தை. பதினாறு வயதுக்குள் படிக்கவேண்டியன படித்து, உணரவேண்டியன உணர்ந்து, தெளியவேண்டுவன தெளிந்த தெய்வீகக் குழந்தை அது. சுப்பிரமணிய பிள்ளைக்கு ஆலவாய்ச்சொக்கன் அருங்குல தெய்வம். பதினாறாண்டுத் திருமகன் ஞானசம்பந்தனோடு - ஆம்; அதுதான் செல்வனுக்கு அப்பெற்றோரிட்ட திருப்பெயர்-மனைவி உடன்வர மதுரை சென்றார்; பெருமான் திருமுன் மனமுருகி நின்று வழிபட்டார். ஞானசம்பந்தர் கண்மூடி நின்று கண்ணுதலானைக் கைகூப்பி வழிபட்டுக் காதலாகிக் கசிந்து உருகி நின்றார்.

தந்தையும் தாயும் செல்வப்புதல்வன் சிவனடிமைத்திறத்தை எண்ணி மகிழ்ந்தனர். காத்திருந்தனர் புதல்வன் வழிபாடு முடிந்து தம்முடன் ஊர்க்கு அழைத்துச்செல்ல. ஆனால் ஞானசம்பந்தர் சிந்தை

ஞானசம்பந்தம் பெற்றிருந்தால் தானே! மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்து சொக்கநாதப் பெருமான் திருவடியின்பத்திலே சொக்கித் திளைத்து அயர்ந்து நின்ருர்.* அன்னையார் அழைப்பு அவர் செவியில்

ஐந்துபேர றிவும் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையேயாகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையாஞெடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபேரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்.

— சேக்கிழார்.

விழவில்லை; அன்னை பராசக்தியின் அன்பழைப்புத் தான் அவர் செவியில் விழுந்தது. தந்தையின் தவிப்பு அவர்க்குப் புலனாகவில்லை; உலகத் தந்தையான ஆலவாய்ச் சொக்கன் அருள் உவப்புத் தான் அவருக்குப் புலப்பட்டது. நினைவு மீண்டபோது என் உடலுக்கு அன்னையும் அப்பனுமாகிய உங்களோடு நான்வருவதெப்படி? என்னுயிர்க்குத் தலைவனும் தலைவியும் அதோ, சொக்கநாதப்பிரானும் அங்கயற்கண்ணியுமல்லவோ' என்று உதிர்ந்தன சொல் மலர்கள். கலங்கினர் தாய்தந்தையர். தவமிருந்து பெற்ற மதலையைப் பிரிந்து தவிப்பதா? தேறுதல்கூறி அனுப்பிவிட்டார், தெளிந்துவிட்ட ஞானசம்பந்தர். அப்பெருந்தகையின் மனம் அருளியலாந் திருவடி இன்பம் ஒன்றிலேயே வட்டமிட்டுச் சுழன்றது,

**அருள்வாக்கு உதித்தது :**

பொற்றாமரைத் தீர்த்தத்தில் நீராடுவார்; புது மலர் கொய்வார்; பொன்னார்மேனியன் பொன்னடி போற்றிசைப்பார். இப்படிப் பலநாள். ஒருநாள் சிவபூசைச்செல்வர் சிலரைக்கண்டார். உள்ளம் வேட்கை உற்றது. என்செய்வது? பூசனை புரியப் பெருமான் திருவுருவேண்டுமே? விருப்பத்தை நிறை வேற்ற வல்லவனை வேண்டினார். கனவிலே எழுந் தருளினான் கனியினும் இனிய தமிழ்ச் சொக்கன். பொற்றாமரைக்குளத்து ஈசான மூலையில் கங்கையுள் இருப்பதாகவும், எடுத்துப் பூசைசெய்து இன்புறு மாறும் அருள்வாக்கு உதித்தது.

**கண்ணுதலோன் கரத்தில் வந்தது :**

மறுநாள்காலை ஞானசம்பந்தர் மகிழச்சிக் குளத் தில் முழுகியெழுந்தவர் பொற்றாமரைக் குளத்திலும

மூழ்கினார். என்ன வியப்பு ! ஈசான மூலையில் இருந்தான் இறைவன். கரத்திலெடுத்த அடியவர் மனம் களித்தது; கூத்தாடியது; களிமனம் துள்ளியது தமிழ்ப்பாடல் முதன் முதல் திருவாயில் உதித்தது. கண்ணுக்கினிய பொருள் !'-துள்ளுகின்றது உள்ளம் என்கரத்தில் வந்தாய் !' - என்ன பெருமிதம் விண்ணவரும் பரவும் அற்புதம் ! என்னே நின் விச்சை !' ஆனந்த பரவசமடைகிறது நெஞ்சு என்னையும் நின் குறைவிலா நிறைவாம் கடலில் நண்ணும்படி செய் சொக்கநாயகனே' என்று வேண்டி உருகுகிறார். சொக்கநாதக்கலித்துறை என்ற அருட்பனுவல் திருவாயில் விளைந்து மலர்கிறது அருள் வெளிப்பாடு. அருள் வெளிப்பாட்டின் அடிப் படையில் ஆனந்த பரவசம். அப்பரவசப் பாமாலை ஆம் ; இவையே சொக்கநாதக் கலித்துறை. 'பெருமான் கிடைத்து விட்டான். இனிக் குருநாதன்

வேண்டுமே' என்ற கவலை அடுத்தது. வேண்டத்தக்கது அறிவோன் ; வேண்டமுழுதும் தருவோனல்லவா பெருமான் ! திருவாரூர் சென்று தமது உபதேச பரம்பரையில் வந்த ஞானப்பிரகாச தேசிகரிடத்தில் ஞானோபதேசம்பெற அருளிப்பாடு பிறந்தது. பறந்தது ஞானசம்பந்தக் குணக்குன்று. அருள் விளையாட்டை யாரே அறிவார் ? ஆரூர் ஞானப்பிரகாசர் கனவிலும் ஞானசம்பந்தர் வருகை முன்பே உணர்த்தப்பட்டது. காத்திருந்தார் கமலையிலே அக்கனிவுடையார்.

**கமலையில்**

அன்று சோமவாரம், கமலை ஞானப்பிரகாசர் சீடர் வருகைநோக்கி மலர்ந்து வீற்றிருக்கின்றார்

எங்கு? சித்தீச்சரத்தில், தென்முகப்பெருமான் திருமுன்பு. ஞானநெறியை அன்றாலின் கீழிருந்து உரைத்த ஞானநாதன் திருமுன்பு. காந்தம்கண்ட இரும்புபோல் ஞானசம்பந்தர் சித்தீச்சரத்துக் குருநாதர் திருமுன் சென்றார்; பணிந்தார்; இருகண்ணீர் வார இன்புற்றார். குருநாதரின் திருவருள் நே[illegible]தாற், சிவஞான உபதேசம் பெற்றார் சீடர். பூசை எழுந்தருளிக் கொடுக்கப்பெற்றார். சொக்கநாதப் பெருமானை வழிபட்டார்; நெஞ்சு கனிந்து வழிபட்டார். தமிழ்க்கவி தழைத்தது; மணநிறைந்த ஞான அநுபவம் சொக்கநாத வெண்பாவாக மலர்ந்தது. குருநாதன் திருவடியில் நறுந்துணர் சாத்தினார். அதுவே ' ஞானப்பிரகாசமாலை என்னும்

நன்னூல்.* மனக்கவலை தீர்ந்தது; தனக்குவமை யில்லான் தாள்சேர்ந்த பெரும் பேறேயன்றோ அது!

**ஒருநாள் நிகழ்ந்தது :**

ஒருநாள் திருக்கோயில் வழிபாட்டுக்குப்பின் இல்லம் திரும்பும் ஞானப்பிரகாசர் திருமுன் ஏவலர் இன்மையின் தாமே கைவிளக்கேந்திச் செல்கின்றார் ஞானசம்பந்தர். மனைவாயிலில் 'நிற்க' என்ற ஒரு சொல்கூறி மனைஉட்புகுகின்றார் குருநாதர். நள்ளிரவு



**ஞானப்ர காசன் கமலையில் வாழ்குரு நாதன்சொன்ன**
**மோனப்ர காசத்தைக் கேட்டவன்றே நெடு**
**மூச்சலைவற்ற**
**ஊனப்பிரகாசச் செயலற்று என்உள்ளம்**
**உருக்கியென்றும்**
**வானப்ர காசத்து நேயத்திலே சென்று மண்டியதே"**

**— ஞானப்பிரகாசமாலை.**

நேரம்; ஆசான் உரைத்தபடி நின்றார். இரவில் மழை கொட்டுக்கொட்டென்று கொட்டியது. ஞானசம்பந்தர் மேல் துளிகூடப் படவில்லை. ஆகா! இதுவல்லவா திருவருள் ஏற்றம்! விடியற்காலம் சாணம் தெளிக்க வந்த குருபத்தினியார் வியந்து நிற்கிறார். ஓடோடிச் சென்று கணவரிடம் உண்மை உணர்த்துகிறார்.

## தருமையில் தவ அரசு :

குருநாதர் தம சீடர் அருள்நிலை கைவரப்பெற்ற காட்சியைக்கண்டு களித்து, " நீர் நாமும் வணங்கும் குருராயர் ஆனீர் " என்று அருளி, வேண்டியவிடத்திற்சென்று தங்கிச் சிவஞான உபதேசம் புரிந்து வாழுமாறு கூறுகின்றார். ஞானசம்பந்தர் மனம்துணுக் குறுகிறது. 'குருநாதன் திருவடித் தொண்டைவிட்டுப்

பிரிந்து வாழ்வதா ? - குமுறுகிறது உள்ளம். அடியேன் எவ்வாறு பிரிவேன் ?-குருநாதர் அருளாணையை மீற நீ யார் ? ' ஆம் ; எனக்கென்று சுதந்திரம் ஏது?' பொதிக்கும் எருதுக்கும் தன்னிச்சை உண்டோ இவை ஞானசம்பந்தர் திருவுளத்தெழுந்த எண்ண அலைகள். ஞானப்பிரகாசர், மயிலாடுதுறைக்குக் கிழக்கில் வில்வக் காடாய் விளங்கிக் காவிரிக் கரையிலுள்ள தருமபுரத்தலம் சென்று அருள் தவம் பெருக்கி வாழ ஆணை தந்தருளினார்.

அருள் கனிந்த உள்ளம்; தவம் மலிந்த திருமுகம், குருஞானசம்பந்தராகிவிட்டார் அப்பெருந்தகையார். வழிநடையாகப் புறப்பட்டார்.

தருமை வந்தடைந்து அருளாட்சி புரிந்து தவம் பெருக்கித் தருமபுரீசரை - அபயாம்பிகைத் தாயை

வணங்கி ஒழுகலானார். சீவில்லிபுத்தூரில் தோன்றிய இந்த ஞானக்குழந்தை செந்தமிழ்ச் சோழநாடு செய் தவத்தால் அருளாட்சி புரிந்துவந்தது. சோழநாட்டி லிருந்து பாண்டியநாடு சென்று சிவம் பெருக்கினார் திருஞானசம்பந்தர். பாண்டிய நாட்டிலிருந்து சோழ நாடு புகுந்து தவம் பெருக்கினார் குருஞானசம்பந்தர் என்று உலகு வியந்து பேசலாயிற்று.

## சிவசமாதி கூடுதல் :

சிவபோக இன்பத்தை - இன்ப அனுபவத்தை இனிய வெண்பாக்களால் எடுத்துரைத்தார்; சைவ சித்தாந்த முத்தி நிச்சயம் பாடியருளினார். தசகாரியங் களைப்பற்றிய இனிய ஓர் அகவலும் அருளினார். திரி பதார்த்த ரூபாதி தசகாரிய அகவல்)

பெறும் அந்நூல். சோடசகலாப் பிராசாதஷட்கம் என்றொரு நூலும் உரைத்தருளினார். தருமபுரீசர் திருக்கோயிலுக்கு மேற்கே ஒரு கோயில்கட்டி சிவ லிங்கத் திருவுருவை அதனுள் எழுந்தருளப் பண்ணி னார். தமக்குப் பரிபூரணநிலை நெருங்கி வருவதை உணர்ந்தார்; அப்பெருமான் திருவடி நிழலிற் சமாதி கூடத் திருவுள்ளம் எண்ணியது. சீடரிற் சிறந்த பக்குவமுடையபெருந்தகையாராகிய ஆனந்தபரவசரை அழைத்தார்; ஞானோபதேசம் அருளினார். அரு ளாட்சியை அவ்வருளாளரிடம் ஒப்படைத்துச் சிவ சமாதி எய்தியருளினார்.

**ஆனந்த பரவசம் :**

குருநாதர் தேர்ந்தெடுத்த சீடரோ, மிகவும் முதிர்ந்த திருவருட் பண்பாடு தேங்கிய அருளாளர்.

குருவருள் ஒன்றே அவர் குறிக்கோள். சிவஞான மேலீட்டாற் சிந்தை உருகினர். முத்திப் பெரும்பேறு தாமும் எய்தினர்.

**உலகு காணப் புதுமை :**

சீடர்கள் மனம் களிந்தனா. சிவசமாதி கூடியிருந்த குருஞானசம்பந்தசுவாமிகள் திருமுன் கல்லுங் கரைய வேண்டினர். அருள்மரபு - உபதேசமரபு வளரவேண்டுமே என்பது வேண்டுகோள். குருநாதர் மீள எழுந்தார்; அருளொளி பரப்பினர்; சச்சிதானந்த தேசிகர்க்கு அருளரசு தந்து, வைகாசித்திங்கள் அமரபட்சம் சப்தமி திதியில் முத்திப் பெரும்பேறு எய்தினர். இஃது உலகம் காணாத ஒரு புதுமை.

இயேசுநாதர் தாம் புகுந்த கல்லறையினின்றும் வெளிவந்து அன்பர்களுக்கு மனக்குறை முடித்தார்

என்பர்; அது வெளிநாட்டில். நம் பாரதப் பெருநாட்டில் ஞானநெறி நின்ற அருட்செல்வராகிய இவ்வாதீன முதற்குரவருக்கே இந்நிலை வாய்த்தது.

**மரபு வளர்ந்தது:**

இந்த மரபு வளர்ந்து வந்தது. தருமபுரம் திருமடம் திருக்கோயில் அருளாட்சி மரபு தழைத்துப் பெருகிற்று. அருள் தவம்நிறைந்த பல அருளாளர்கள் இந்த ஆதீனத்து விளங்கினர். பல அற்புதங்கள் செய்தனர். உலகம் அவர்களால் பெற்ற பயன்களோ மிகப்பல.

அப்பெருந்தகையாளர்கள் உலகம் வாழ வாழ்ந்தனர்; நினைத்தனர்; பேசினர்; எழுதினர். உலகம் வாழ்தல்ஒன்றே குறிக்கோள். சமுதாய வளர்ச்சி,

சமுதாயத்தில் சமய வளர்ச்சியே அவர்களது திருவுள்ளத்தில் மேலோங்கி நின்றன.

உலக நிலைபேற்றுக்காக உளங்கனிந்தனர். நல்லன வாழ நற்பணிகள் பல புரிந்தனர். சொக்கநாதர் வழிபாட்டைக் காலந் தவறாமற் புரிவதும் தாகம் உண்டாகி ஓடிவரும் பக்குவிகளுக்கு அருளுபதேசம் செய்வதுமே அவர்கள் கொண்டிருந்த கொள்கைகள். சமய விளக்கம் — சமயஞான உபதேசம் - அவர்கள் மூச்சாக இருந்தது. உபதேச பரம்பரையாக இருந்துவருவது இம்மரபு. இந்த மரபிலே இன்று இருபத்தைந்தாவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் அருளாட்சி.

வாழ்க குருமரபு ! வாழ்க கயிலைக் குருமணி

கருணா நிதியே கடவுளே அன்பர்
பொருளான பேரின்பப் பொற்பே-ஒருநாளும்
நீங்கா தெனதறிவில் நின்றசுகா னந்தமே
ஆங்காண் நீ சொக்கநாதா.

— குருஞானசம்பந்தர்

உ

குருபாதம்

# சிவபோக சாரம்



சித்தி தருநாதன் தென்கமலை வாழ்நாதன்
பத்தி தருநாதன் பரநாதன் — முத்திப்
பெருநாதன் ஞானப் பிரகாசன் உண்மை
தருநாதன் நம்குருநா தன்.

தேசு செறிகமலைச் செங்கமலப்பொற்பாதன்
பேசுதமிழ் ஞானப் பிரகாசன் — பாசவினை
வாட்டினான் மீட்டுநான் வாரா வகையருளைக்
காட்டினான் கூட்டினான் காண்.

அநாதிசுக ரூபி அரனடிக்கீழ் என்றும்
அநாதி சுகரூபி ஆன்மா — அநாதி
இருந்தமலம் போக்கி இறைஅருளி னலே
இருந்தபடி யேகண் டிரு.

ஏதேது செய்தாலும் ஏதேது சொன்னலும்
ஏதேது சிந்தித் திருந்தாலும் — மாதேவா
நின்செயலே என்று நினதருளா லேஉணரின்
என்செயலே காண்கிலே னே

ஈசன் அடியில் இருக்கையிலே எங்கெங்கும்
ஈசனடி தேடி இளைத்தேனே — பேசரிய
பொற்பதத்தன் செங்கமலப் பொற்பாதன்
நற்பதத்தைக் காணுமுன் நான். [நன்னுடைய

அவரவருக் குள்ளபடி ஈசனரு ளாலே
அவரவரைக கொண்டியற்று மாறல் — அவரவரை
நல்லார்பொல்லாரென்றுநாடுவதென்? நெஞ்சமே
எல்லாம் சிவன்செயலென் றெண்.

என்னிடத்தில் நின்செயலே இல்லையென்றல்
யாதுறினும்
நின்னிடத்தில் யான்வேண்டல்
நிச்சயமே — என்னிடத்தில்
இன்மை உயிர்க்குயிர்நீ யின்மை இருந்தியற்றின்
நன்மைதின்மைக் கேதுவோ நான்.

நாம்பெரியம் என்னுமதை நாடா தடக்குமவர்
தாம்பெரியர் என்றுமறை சாற்றியிடும் — நாம்
என்பர் சிறியர் இவரலா திவ்வுலகில் [பெரியர்
துன்பார் சுமப்பார்கள் சொல்.

ஆறாறு தத்துவமும் ஆணவமும் நீங்கிஉயிர்
பேறாக ஆனந்தம் பெற்றாலும் — வேறாகப்
பார்த்திருப்ப தன்றியே பாழான கன்மத்தை
நீத்திருக்க லாமோ நிலத்து.

ஈசன் பலகீனன் என்றக்கால் ஆலயத்தில்
மோசம் வந்ததென்று மொழியலாம் — ஈசனே
ஆக்குவதும் ஆக்கி அழிப்பதுவும் தானானால்
நோக்குவதென் ! யாம்பிறரை நொந்து

தேசம் சிவாலயங்கள் சேர வலையஒரு
மோசம் வந்ததையோ முதல்வனே — தேசத்து
மன்னைவெறுப்பேனோவருவினையைஊட்டுவிக்கும்
உன்னைவெறுப் பேனோ உரை.

---

மெய்கண்டார் கழக வெளியீடு—சஉ.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்



காஞ்சிப்புராண ஆசிரியர்,

மாதவச் சிவஞான யோகிகள் அருளிச் செய்த

# கச்சி ஆனந்த ருத்திரேசர் திருப்பதிகம்.

1950.

## கசச| ஆனந்த ருத்திரேசர் திருப்பதிகம்

ஐந்தையா றிலையை டக்கி அருந்தவம் புரியா ரேனும்
வந்தையா வெனவெல் லோரும் வணங்கிட வாழ லாமால்
மூந்தையா றிரண்டு தன்ம முதல்விசெய் தூஉர் வாழும்
எந்தையா னந்த ருத்தி ரேசனை இறைஞ்சி னோர்க்கே. 1

குடங்களிற் பனைத்த ஞாந்த கொண்மைமால் களிறு மல்குற்
படங்களுங் கொடுமின் னார்செய் பருவரல் பாற்ற லாமால்
மடங்களைந் தறிவான் மிக்க மாதவர் மனம்போற் காஞ்சி
இடங்கொளா னந்த ருத்தி ரேசனை இறைஞ்சி னோர்க்கே 2

வருந்தலா தெண்ணெண் கல்வி வாய்க்குமெண் செல்வப் பேறு
பொருந்தவா புகங்க ளூறும் புகழுடன் பொலிய லாமால
திருந்தவால் வளையு முத்துஞ் செய்தொறுஞ் செறிதென் காஞ்சி
இருந்தவா னந்த ருத்தி ரேசனை இறைஞ்சி னோர்க்கே 3

பொறைதவ மறிவொ ழுக்கம் புத்திர மித்தி ராதி
குறைவறு செல்வம் யாவும் குலவவீற் றிருக்க லாமால்
மறையொலி முரசந் துஞ்சா வளநகர்க் காஞ்சி வாழும்
இறைவனு னந்த ருத்தி ரேசனை இறைஞ்சி னோர்க்கே. 4

ஆசைவே ரகழ்ந்து வெண்ணீ றஞ்செழுத் தக்க மாலை
பூதியுச் சரித்துப் பூண்ட புனிதரோ டிணங்க லாமால்
யோசனை கமழுய் யான முடுத்திடுங் காஞ்சி யூர்வாழ்
ஈசனு னந்த ருத்தி ரேசனை இறைஞ்சி னோர்க்கே. 5

பானந்தங் கையி லேந்தும் பைந்துழாய் மார்பன் முன்னும்
வானந்தங் கமரர் யாரும் வணங்கவாழ்ந் திருக்க லாமால்
கானந்தண் பொழிலி லாறு கால்செயுங் கச்சி மூதூர்
ஆனந்த ருத்தி ரேச னடித்துணை இறைஞ்சி னோர்க்கே. 6

கங்கணுன் குள்ளான் முன்னுங் கருமமுங் காரா னூர்தி
செங்கையார் பாசந் தன்ஞற் சிமிழ்த்தலுந் தீர லாமால்
அங்களா லுயர்ந்த காஞ்சி அககக ரமர்ந்து வாழும்
எங்களா னந்த ருத்தி ரேசனை இறைஞ்சி ஞோர்க்கே. 7

விழிகளான் மாதர் நாளும் விளைத்திடும் வேட்கை யாய
குழிகளா டுற்று வீழுங் கொடுந்துயர் குமைக்க லாமால்
வழிகளார் சோலை சூழ்ந்த மாமதிற் கச்சி வாழும்
எழில்கொளா னந்த ருத்தி ரேசனை இறைஞ்சி ஞோர்க்கே 8

இருக்கெலா மளவிட் டின்னும் இனைத்தென அறிய எட்டாத்
திருக்குலா வியபே ரின்பச் செழுங்கடல் திளைக்க லாமால்
மருக்கலா ரங்கண் மொய்த்த வாவிசூழ் காஞ்சி வாழ்வுற்
றிருக்குமா னந்த ருத்தி ரேசனை இறைஞ்சி ஞோர்க்கே. 9

மாந்தளி ரியலார் செம்பொன் மண்ணெனு மார்வ வாதி
நீந்திமே லான முத்தி நீள்கரை ஏற லாமால்
காந்துபொன் மாடஞ் சூழ்ந்த கச்சியம் பதிவாழ் கங்கை
ஏந்துமா னந்த ருத்தி ரேசனை இறைஞ்சி னோர்க்கே. 10

ஆனந்த மலைபோ லோங்கும் அம்பலத் துமையாள் நங்கை
ஆனந்த மகிழ்ச்சி பூப்ப ஆனந்த வமிழ்த மூறி
ஆனந்த நிருத்தஞ் செய்யும் அங்கணன் கச்சி மூதூர்
ஆனந்த ருத்தி ரேசன் அடியிணைக் கன்பு செய்வாம். 11

திருச்சிற்றம்பலம்.

---

சிவஞான யோகிகள் திருவடிகள் வாழ்க

**சைவமும் தமிழும் தழைத்தினி தோங்குக.**

உ

## மாதவச் சிவஞான சுவாமிகள் வணக்கப்பாடல்

கலைதேர் நமச்சி வாயகுரு
　　கருணைக் கடலில் திளைத்தாடிக்
கலகப் பாசத் தொடரறுத்துக்
　　காமத் தறியை அறவீழ்த்தி
அலையுஞ் சமயத் தருக்களைக்கீழ்
　　அடி வேரோடும் அகழ்ந் தெறிந்திட்டு
அருளின் படாத்தை முகமேற் கொண்டு
　　ஆதிவேதா கமங்க ளெனும்
தொலையா மணிகள் இருமருங்குந்
　　தொனிக்கச் சைவ மதம் பொழித்து
துங்கமோடும் உலக முற்றுஞ்
　　சுற்றும் வெற்றி வாரணமே
மலையா தருளும் முனிவர்சிகா
　　மணியே வருக வருகவே
வளமார் துறைசைச் சிவஞான
　　வள்ளால் வருக வருகவே.

உ

சிவமயம்

# இவ் வெளியீடு

காஞ்சிபுரம் பச்சையப்பன் உயர்நிலைக் கல்விக்கூடத்

தமிழாசிரியர், வித்துவான்

## திரு. பூசை. ஆ. நமச்சிவாய முதலியாரவர்கள்

பொருளுதவியால் அச்சிட்டு

## மெய்கண்டார் கழகத்தின

ஆறுவது யாத்திரை ௰௨-வது கிழமை

விக்குருதி கார்த்திகை கக ஞாயிறு வழிபாட்டினன்று

பிள்ளையார்பாளையம் அக்கணம்பாளையத் தெரு

ஆனந்தருத்திரேசர்திருக்கோயிலில் அன்பர்களுக்கு வழங்கியது

சைவமும் தமிழும் தழைத்தினி தோங்குக.

ஸ்ரீநிலயம் பிரஸ், காஞ்சிபுரம்.

# சிறப்புப்பாயிரம்

திருநெல்வேலியிலிருக்கும்
கர்நாடகத்துரைத்தனத்தில்
திருநெல்வேலிச்சீமையையரசுபுரிந்த
வடமலையப்பபிள்ளையனவர்கள்
வம்சோத்பவராகிய
சுப்பிரமணியபிள்ளையனவர்கள்
குமாரர்
**சுவாமிநாதபிள்ளையனவர்களென்ற**
குமாரதாஸ் இயற்றியது

2. எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நன்மைமிகுதென்குருகைவாழ்தேவேச
நாவலனுந்துலைவில்லிநகரமாயன்
றன்கழலிற்பாடுபுசெந்தமிழோர்போற்றுஞ்
சந்த்ரகலாமாலையெனுஞ்சத்வித்தை
அன்பர்மனமிலத்தறமாமெருதுபூட்டி
அறிவெனுமேழுதுதுணிவதுவரம்பிட்
டின்புறஞானேதகம்விட்டருளானந்த
மெனும்பயிருண்டாகவிதைத்திட்டான்மன



# சிறப்புப்பாயிரம்

ஸ்ரீவில்லிபுத்தூரிலிருக்கும்

வித்வான்

## பக்தராவி ஹய்யங்காரவர்கள்

இயற்றியது.

3. பன்னிருசீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்.

சீர்மேவுதுலைவில்லிமங்கலத்தினிதுவளர்
  தேவாதிதேவனென்கிற்
சிந்தித்தவண்ணமே வந்தித்தவர்க்கருள்
  செய்துகந்திடுவெள்ளலாம்
வார்மேவுகொங்கைமலர்மங்கையுறைமார்பனும்
  மாறனுக்கினியமுகினல்
ஊழிபடுமெவர்க்குவான்றணையெனுங்களினமலை
  மலரனையநயனன்றனைப்
பார்மாதுதிலகமுறழகுருகையம்பதியிலுறை
  பைந்தமிழ்த்தேவராஜ
பாநிமொழிந்தசந்திரகலாமாலையாம்
  பண்ணவர்க்கினியவமுதால
ஏர்மேவுமாயனதியாலாயினனன்றி
  யிகபரமுமுதவுமிதுவே
பின்றமிழ்மறைக்குநிகரென்றுபணியரசனு
  மெழிற்றலைவணங்கினனே.

# சிறப்புப்பாயிரம்

ஆழ்வார்திருநகரியிலிருக்கும்

தேவராஜபாரதிகளின் மாணாக்கராகிய

வித்வான்

## ஜீயர் கிருஷ்ணமாசாரியாரவர்கள்

இயற்றியது

4. அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

செந்தமிழாரெழுத்துச்சொற்பொருள்கள்யாப்புத்
தேசினொடைந்திலக்கணமாஞ்செந்தேன்பில்கும்
கந்தமலர்யாவையுஞ்சேர்த்தறிவாநாரிற்
காதலுறுந்தாலுவெனுங்கையினாலே
பந்தனஞ்செய்தொளிர்குருகைவாழ்தேவேச
பாரதியுந்தேவர்பிரான்பதயுகத்திற்
சந்தரகலாமாலைதனைச்சாற்றுனைத்
தமிழருமையென்சொல்வேன்றடங்கண்மாதே

# சிறப்புப்பாயிரம்

ஆழ்வார்திருநகரியிலிருக்கும்

கரிவலம்வந்தநல்லூர்

வித்வான்.

## வீரராகவய்யங்காரவர்கள்

இயற்றியது.

5. நெடிலடியாசிரியவிருத்தம்.

அதிரசசல்லாபகவிக்குஞ்சரனுக்கேவேச
　　னமுதனுவாற்
புதியநிலவொளிர்மாலைதலைவிலிமங்கலமாற்றுப்
　　புனைந்தான்கண்டு
விதியினுயர்தருநாவேறினள்வாணியனைத்[illegible]வெ
　　விடவாய்கொண்டோ
[illegible]னருமைசொலவென்றனிருநிலத்துப்புலவருங்கே
　　டின்புற்றாரே.

---

# சிறப்புப்பாயிரம்

ஆழ்வார்திருநகரியிலிருக்கும்

தேவராஜபாரதிகளின்மாணாக்கராகிய

வில்லூர்

கீர்வாணவித்வான்-கோபாலசாரியாரவர்கள்

குமாரர், வித்வான்

## திருமலாச்சாரியாரவர்கள்

இயற்றியது.

6. கழிநெடிலடியாசிரியவிருத்தம்,

கலைகள்விரி குருகையில்வாழ்தேவேசபாரதிபாற்
கமலச்செல்வி
வலமார்பன்றேவர்பிரான்சேவடிக்கேசந்த்ரகலா
மாலையொன்று
மலைவறுமெய்ப்பதமூட்டியருடியெனவமுதொழுக
வழங்கினனைப்
புலமைமிலைபகர்தொறும்பஃறலையனந்தன்றனைநினைப்
புலவரேறே,

---

# சிறப்புப்பாயிரம்

ஆழ்வார்திருநகரியிலிருக்கும்,

தேவராஜபாரதிகளின்மாணாக்கருஞ் சகோதருமாகிய

## சேஷய்யங்காரவர்கள்

இயற்றியது,

7. கழிநெடிலடியாசிரியவிருத்தம்

செம்பொன்மணிமாடந்தென்குருகைப்பாரதி
தேவேசவள்ளல்
உம்பர்தொழுநாரணனேபரமெனவெம்போலியர்கட்
குணர்வுண்டாக
வம்பவிழும்பைம்பொழில்சூழ்தொலைவில்லிமங்கலமால்
மலரடிக்கே
அம்புவியிற்செந்தமிழாற்சந்த்ரகலாமாலை
யருள்செய்தானை,

---

சிறப்புப்பாயிரம்முற்றும்.

ஃ

இராமானுஜாயநம:

    

# சந்த்ரகலாமாலை

வழிபடுதெய்வவணக்கம்.

## வெண்பா.

பூமாதுவாழ்நிதியம் பொங்குதுலைவில்லிநகர் *
மாமாற்குச்சந்த்ரகலாமாலைசொல்வன் தேமாலைக் *
காமாயுதவிழியாள் காரிமகிழ்நங்கைசுதன் *
கோமாறனைத்தொழுது கொண்டு. *

இராமானுஜன் றுதி.

செந்திருவாழ்மார்பனெங்கடேவர்பிரான்சேவடிக்கே *
சந்த்ரகலாமாலைதனைச்சாற்றவே சந்ததமும் *
தேனுகநாசன்சமயஞ்சீர்த்திபெறவோதுமிரா *
மானுஜனேநீதுணையாய்வா.

வழிபடுதெய்வவணக்கம்

முற்றும்.

உ

கடவுடுணை

# சந்த்ரகலாமாலை

## நூல்.

பதினான்குசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்

பொங்குவெண்டிங்களணிகர்சங்கநிலவொருபுறம்
பொழிதரப்பகலவனையே
பொருவுசக்கரமிருடுறப்பவொருபுடையிலொரு
புடையிலிகல்வாளொளிரவோர்
பங்கினிற்கதையிலகவலிகொள்வளைசார்ங்கமொ
பக்கநின்றொளிரவொருபாற்
பசுபதிகபாலவினையகலவேகுருதிநீர்
பாலித்தமறுவிலங்கக்
கொங்குலவுகமலையகலாதுவலமார்பினிற்
குறிகொளத்துளவவணியற்
கோதினறையோடநின்றுடவச்சினிதேவர்
குறைதீர்த்தபரமவருள்வாய்
திங்கண்மணிமாடமொளிர்துலைவில்லிமங்கலந்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுநங்கைவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே,

# சந்த்ரகலாமாலை

காலினகமுற்றநாடொட்டிதுவரைக்குமுட்
கவலைகொண்டிரவுபகலாய்க்
கழுதுகள்பிசாசமெதிர்போராடவலறியே
சுடுவாசாரியாகப்
பாலைவனநாடுகள்கழிந்துபொருளாசையாற்]
பாவியைத்தருமனென்றும்
பஞ்சையைத்தனபதியென்றுங்கடுங்கோபியைப்
பரமசாத்வீகனென்றுந்
சாலவொருகாசரைக்காசுபெறவேயினிய
தமிழ்மதுரவாரியாகச்
சாற்றியலையாதுனதுபாதாம்புஜத்திலே
சாற்றிடற்கருள்செய்வரதா
சீலமறையோர்பரவுதுலைபிலபிமங்கலத்
திருநகருவந்துவாழுந்
செங்கமலமீதுறையுநங்கைவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே, (௨)

வெண்ணகைத்துவரிதட்கலசமுலையாரெனும்
வேடர்விழியாகும்வலையை
வீசவும்புத்திமான்போகப்பசும்புல்லை
மேயமதராஜனிறையுந்

## சந்த்ரகலாமாலை

தண்ணளியிலாதுயிர்க்கழுவிலி டதுவெனத்
தனமாவியுடல்கள்யாவுந்
தன்வசமதாக்கவெறிநாயின்வாய்ச்சீரைபோற்
றூனைகரைந்துதூய
எண்ணமுழுதுங்கடந்துலதுளோர்பழிசொலற்
கிருநான்குசாணுமொருசா
ணென்னவுடனுணியலைவோர்கண்மாடணுகுறு
தெளியனேற்கருள்செய்வரதா
திண்ணமதில்சூழ்ந்திலகுதலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுநங்கைகவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே.

துன்றுதிரைவிரிபுவரிகாவிலத்தடியனேன்
சொல்லாதபொய்களில்லை
தோஷமென்பவைகண்மிகநேரநானறியாத
சூதொன்றுமுலகிலில்லை
நன்றியெனதருகிலணுகாது தீவினைபுரிய
நானலாதொருவனில்லை
நாய்நரிகளீயெறும்பாயாகருவழியுணன்
னாடாதஜன்மமில்லை

என்றிடினின்னுமமன்பொடொருசாலோதி
யேத்துமெனதிருவினைகளை
யென்றுமுனமோடுபனிபோலகலநீயருள்செ
யெந்தையேகருணைவரதா
தென்றறவழ்சோலைசூழ்துலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுநங்கைவலபார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே, ([illegible])

வடகலைகளுணரவொருகாணினையுமுதியநான்
மறையுணரநினையுமொருகால்
வண்டமிழ்களுணரவொருகானினையுமரசர்கலை
வரவேண்டிநினையுமொருகால்
தடமுலையாரனுபோகநினையுமொருகாலில்வே
தாந்தமதைநினையுமொருகால்
தருமுணவுறக்கமிவைநினையுமொருகாற்கழனி
தனமீட்டநினையுமொருகான்
“மடமைகொடுபலமரம்பார்த்திடுந்தச்சனொரு
மரமேனும்வெட்டானெ”னும்
வார்த்தைபோலெனதுளமயங்குதென்னய்யனின்
மலரடிக்காட்கொள்வையோ

சந்த்ரகலாமாலை

திடமருவுபுரிசையுயர் துலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுநங்கைகவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே.

வட்டவாருலகிலிறையளவுசிறுவாழ்வுபெறின்
மமதைகொடுநிலையதென்றே
மதித்தொருவர்நிகரின்றியெவைவெய்யவெவர்பெரிய
வாரணநம்பியென விருப்பார்
கட்டமுறிலப்பனீயேகளைகண்வேறிலை
கடைக்கணித்தருள்வையென்று
கண்ணீர்ததும்பிடச்சொரூஉம்நாடுனக்கடிமை
காளெனவெளிக்குரைத்துத்
"துட்டமனையாண்முதியவயதுவந்துற்றபின்
றனைகணவனென்றடைதல்போற்"
றோத்திரம்புரிவர்தமைநீத்துனதுமெய்யடியர்
தொகுதிபெறவருள்செய்வரதா
சிட்டர்மறையோதொலிகொடுலவுவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுநங்கைகவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே.

நெஞ்சாரவெவவரையுந் தூஷணம்புரியவெகு
நிபுணனெனதிலினுநமக்கு
நிகரொருவரிலையென்றுமமதைகொளமேதாவி
நீசநெறிவிளையமுனமுள்
அஞ்சாதுபிறர்பொருளைவெவ்வப்பிசாசமுற
மயல்வாழுமனதுசகியா
தழுக்காறடைநதிடுதுருத்தியருகடைவர்பா
லருண்மொழியிலாவேட்டைநாய்
எஞ்சாதகாமககளஞ்சியமதாங்கொடிய
னீடேறுநாளுமுளதோ
வென்னபிழைசெய்தாலுநின்னையலதாரருள்வ
ரெந்தையேகருணைவரதா
செஞ்சாலிவிளைவயல்கொடிலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கலமீதுறையுநங்கைவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே. (எ)

எட்டுணையுநன்னினைவிலேன்கொடியசெய்தவினை
யெத்தனைகளோவொருவரா
லெண்ணமுடியாதெனதுபாபமயனுமற
வெழுதமுடியாதுபிறவி

துட்டநெறிபொய்களவுசூதுகோபங் கொலை
துராசைசிறைபேழையெனதுள்
சொல்லியறியேன்றருமமென்றேனுமெனதுபாற்
றோன்றுவதுமுழுதும்வேஷம்
'ஒட்டகமதற்கொருவிடத்திலோகோணலத
னுடலெலாங்கோணலன்றோ"
வொன்றெனறரைப்பதேயின்றனையடைந்தவெ
குதவிபுரிகருணைவரதா
தெட்டபழநறைமொழிகுதலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறைபுநங்கைவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே. (அ

இருநிலமுமனுவுமுளவெவையுமுனதருளின்வழி
யிலையுமலதிறைவிலகுமோ
வெனைமருவுவினையகலவருளலொருபெரிதோபிற
ரெவர்களைகணருள்செய்வரதா
முருகுவிரிநறியபரிமளமொழுகுபுதியதன
முளரிமலரனையவெழிலார்
முகமுமிருகயலனையவிழியுமதிரசமருவு
மொழியுமொளிருடையநங்கை

## சந்த்ரகலாமாலை

திருக்குமரனரிபெண்டுகளொடுபிரசமுணவுதவு
தலையுவிழுமகிழவணிசெய்யோன்
தமிழினருமறைபுகலுமிறைமவுனமுனிபரவு
சரசிருகசரணயுகளா
திரைபொருதுபொருனைசூழ்துலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலஸ்ரீதுறையுநங்கைவலமார்பிலது
தேவேசமுகில்வண்ணனே, (௧)

பல்லாயிரங்கோடியண்டமென்றவைதொறும்
பஞ்சபூதமுமளித்தெண்
பத்தீரிரண்டுநூறாயிரம்யோனிகள்
பகுத்தெழுபிறப்பிட்டதிற்
பொல்லாதுநல்லதிதுவென்றுணருமாந்தருட்
புனிதர்மரபெனையமைத்தும்
போதவொருகீரைகீழ்ப்புல்லுருவிபோற்காம
போகமதமாத்சர்யமாஞ்
சல்லாபவகுணரையேன்படைத்தாயவர்
தமோகுணப்ரகாரனுக்கிச்
சத்வகுணவிஷ்டைதளிராதுமேவினைரவை
தவிர்த்தெனையாட்கொளவையோ

# சந்த்ரகலாமாலை

செல்லாடுசோலைசூழ்துலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுநங்கைவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே.

ஆனைதுயருற்றநாண்மூலமென்றோர்தா
மழைக்கவந்தருளவிலையோ
வன்றுபேராசரவையின்றபாஞ்சாலிகலை
யபிவிர்த்தியாக்கவிலையோ
ஈனமாம்பிணவிருந்திட்டகண்டாகர்ண
னீடேறவருளவிலையோ
இறந்நாராயணவென்றமூர்க்கரற்
கெமபாசநீக்கவிலையோ
நானியற்றியபிழைகணக்கில்லையாராயி
னுவிதன்குப்பையவர்போ
லின்னருள் பெருகபாங்கவீக்ஷணமுதவு
நம்பிசிற்பரதத்வனே
தேவுலவுசோலைசூழ்துலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுநங்கைவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே.

## சந்த்ரகலாமாலை

சரஸீருகத்துறையுமயனோபரன்றரணி
தரனோபரன்றிரிபுராந்
தகனோபரன்புவியிலெவரோவெனச்சிலர்கள்
சம்சயப்படுவதோர்ந்து
பரசமயகோளரிநமெதிராஜரருளினாற்
பாடியக்கலையுரைத்துப்
பாருளீரோம்நமோநாராயணாவென்று
பற்றுமவினைபரமெனக்
கரதலாமலகமாய்க்காட்டியுமெனக்கதென்
கருமசம்சர்க்கதினாற்
கனவுபோற்றோன்றிமறைகின்றதென்னய்யனே
கடையேனையாட்கொள்வையோ
திரவிடநிகமமறுத்துலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுநங்கைவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே.

பாதவக்கொடிகொளடியேனைவந்தடுகர்ம
பாசமினநீங்கவிலையோ
பாகவதபரிசரணையாதித்துவஞான
பரிபாகமாகவிலையோ

# சந்த்ரகலாமாலை

காதலுடனாராயணுவென் றநாமமொரு
காலேனுமோதவிலையோ
காசினியினீயின் றசேதனுசேதனங்
களினுனுமொருவனிலையோ
"போதமில்லாதமகவாயினீன் றவர்நீதி
போதித்துவப்பதல்லாற்
பொன்றன்னைக்குவர்கொலோ" வதுபோலவெ
பொன்னடிக்காட்கொள்வரதா
தீதின்வமையோர்பரவுதுலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீது றைற்புநங்கைவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே.

கள்ள விழுமலரோதிபிள்ளைமுதலாயதீதி
களிலொன் றுகுறைவிலென் று
களிகூரமனைவாழ்வுதரவேண்டுவல்லவேற்
கருதுராகத்துவேஷம்
பள்ளவினைபோகமென்ஞானநிறைவாய்ப்பரம
பக்திமேலாகினையே
பற்றவருடுறவறமளிக்கிலவையன் றியிப்
பாருளொருகுழலிருதலை

கொள்ளியுளெறும்புபோலெ"ள்ளளவுசுகமிலாக்
கொடுமைநீயேபுரிந்தாற்
கூறுவதுயாவரிடமையனாயேனையாட்
கொண்டருள்செய்கருணைவரதா
தெள்ளமுதமறைபாடுதலைவில்லிமங்கலத்
திருநகருவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுமங்கைவலமார்பிலகு
தேவேசமுகில்வண்ணனே.

குருதியூன்றசைநரம்பென்புசலமலமுமுட்
கொண்டுதோல்போர்த்துரோமக்
கூறைவேய்ந்தொன்பதுதுவாரமிட்டுவர்நாறு
குடிலமாங்குரம்பைநிலையாய்க்
கருதிவிஷையாதிநெறியொழுகியெளவனமெலாங்
கழியவுடல்சோர்ந்துவளைவாய்க்
காறளர்ந்தெய்ப்புற்றோர்கோறுணையதாய்க்கொது(
கண்மூடவையமேலிட்
டிருமியொருசுசிருசியிலாதுகண்டேழைமா
ரெள்ளுவிதென்றிழிவதா

# சந்த்ரகலாமாலை

வசமுன்னின்கருணைவாரியமுதூட்டியுன
திணையடிக்காட்கொள்வரதா
திருமிஞரணிருமுதலையில்லிமங்கலந்
திருககருவந்துவாழுஞ்
செங்கமலத்துறையுநங்கைவலமார்பிலங்கு
தேதே. சமுகில்வண்ணனே.

இப்புவியிலுள்ளவரைநானெனதெனுந்துறவு
மினியனிவனென்றுசொலவும்
இருளருநன்னீதிநெறிநூலறியவும்பரம
னெப்பொருட்டனென்றுணரவுந்
துப்பரையுபணைமகவுநிதியடையவுங்கருணை
தோன்றவுயிரோர்புநினைவுந்
தூயபெரியோர்கள்பரனேயமுறவுஞ்சதாச்
சமுகமரியாதையுதவி
அப்பரநினதுபரமானந்தநறைபருகு
மடியருக்கடியராக்கி
யனவரதகைங்கர்யமனமகிழவருளியெனை
யாட்கொள்வைகருணைவரதா

செப்புமுலையார்சூழுமுதுலைவில்லிமங்கலத்
திருநகருநவந்துவாழுஞ்
செங்கமலமீதுறையுமங்கைவலமார்பிலகு
மேகவேசமுகில்வண்ணனே.

## சந்த்ரகலாமாலை

## முற்றுப் பெற்றது

---

## வாழித்திருநாமம்

சீர்பெருகுதுலைவில்லிநகரர்வாழி
தேவர்பிரான்செங்கமலத்திருத்தாள்வாழி
பார்புகழமெய்ப்பொருணன்மறையனைத்தும்
வடந்தமிழ்செய்தருளவதாரணர்வாழி
ஏர்பெருகுபெரும்பூதூர்முனிவன்வாழி
எந்தைமணவாளமுனி இருதாள்வாழி
வாரணியுந்திருமங்கையுறைமார்பற்கு
வருந்துரைசந்த்ரகலாமாலைவாழி.

**வாழி முற்றுப்பெற்றது.**

---

# ஆழ்வார்திருநகரி

# திருஞான முத்திரைப் பிரசுராலய

# வெளியீடுகள்

## திருஞான முத்திரைக் கோவை

1. ஸ்வாமி நம்மாழ்வார்நூற்றெட்டுத் திருப்பதித்தாலாட்டு

திருக்குருகூர் திருவத்தியயன உத்ஸவத்தில் தொன்று தொட்டு சுமார் 400 ஆண்டுகளாக இன்றும் அநுஷ்டானங்களில் ஒன்றாக ஸேவிக்கப் பெற்று வருகிற பழமையான தமிழ் நூல். ஸ்வாமி நம்மாழ்வார் வைபவங்களை பூர்வாசாரியர்கள் அருளிச்செயல்களை அநுசரித்து, எளிய நடையில் எவரும் கண்டு கேட்டுருகும் வண்ணம் அமைக்கப் பெற்றுள்ளது. உபயகவி அப்பா என்பவர் இயற்றியது பெரியன் ஸ்வ. ரா. ஸ்ரீநிவாஸனால், வெளியிடப்பெற்றது.

விலை அணா நான்கு

ஷை தாலாட்டுக்கு வாணிதாசர் அளித்த நன்றியுரை

*மாலூட்டுப் பிறவியெனும் பெருங்கடலைக் கடந்துயிர்கள்*
*மாலைச் சேரப்*
*பாலூட்டும் பசுந்தமிழிற் பரமகுரு வருளமொளிர்*
*பகவ னேர்க்கும்*
*தாலாட்டின் சுவையறிந்து மனமுருக வச்சேற்றித்*
*தரணிக் கீந்தா*
*கோலாட்டும் பெரியனெனும்குலத்துதித்தகோதில் குணக்*
*கொழுந்து நீயே!*

2. ஸ்ரீ சடகோபன் சந்திரகலாமாலை

ஆழ்வார்திருநகரி ஸ்ரீ.உ. வே. தேவேசபாரதிகளின் மாணாக்கரும் கனிஷ்ட சகோதரரும், ஸ்வாமி தெற்குத்திருவேங்கடமுடையான் சந்நிதி அர்ச்சக கைங்கர்யம் பார்த்துவந்தவருமான அநந்தாசாரியார் இயற்றி வெளியிட்டது. திருமப ஷை பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸனால் வெளியிடப்பெற்றது. ஸ்வாமி நம்மாழ்வாரை ஸேவிக்கும ஸேவார்த்திகளின் பாராயணத்துக்குரியது. ரூ. 0—1—0.

3. ஸ்ரீ சடகோப திவ்விய சரித்திரம்—திருக்குருகா நித்திய வாசியும், தமிழாசிரியருமு, உபயகவி வித்

வானுமான ஸ்ரீ. உ. வே. தேவராஜய்யங்
ஸ்வாமிகளென்ற தேவராஜ (தேவேச) பா
கள் ஸ்வாமி நம்மாழ்வார் வைபவங்களை பூர்
சார்யர்களருளிச் செயல்களானை, மணிப்பிரவ
குருபரம்பராப்பிரபாவங்களை அனுசரித்து ஆ
தாரமாய், தமிழில் ஓர் புராண (காவிய) நடை
லியற்றியுள்ளது. 15 படலங்களில் சுமார் 12
திரு விருத்தப் பாக்களடங்கியது.

ஸ்ரீ பாஷ்யக்காரரான, எம்பெருமானுரை
வழிபடு தெய்வமாகக் கொண்டு ஒவ்வொரு படல ஆ
பத்திலும் மேற்படி உடையவர் வைபவ விஷயங்க
விளக்கிக் காட்டும் வணக்கங்களையுடையது.

நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான்கள்
திருப்புளியில் யோகத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்வ
நம்மாழ்வாருக்கு சேவை பிரசாதிக்கும் வைபவங்கள்
மேற்படி எம்பெருமான்களை மங்களாசனம்செய்தவு
திராவிட வேதமாகிய திருவாய்மொழி மொழிந்த வி
கள். ஸ்ரீ மதுரகவிகள் வியக்தமாய் சேட்டுருகி
டோலை கொண்டு க்ஷேமனம்பெற்று, தானும் தன்போ
அடியார்களும் சேவித்து, பூஜித்து, உத்ஸவம் செ
டருளி உஜ்ஜீவிக்கும் வண்ணம் ஸ்வாமி நம்மாழ்

யோகாஸனத் திரு உருவையே அவனருளால் திரு அர்ச் சாஸ்வரூபங்கள் கொண்ட மூர்த்திகளாய், பொருநதி தீர்த்தத்தைக் காய்ச்சி இறுக்கி ஏறியருளப்பண்ணுவித்து, சேவா, பூஜா, உத்ஸவாதிகள் நடத்திவரவும். மதுரகவிகளுடைய சிஷ்ய பரம்பரையில் ஒருவரால், தமிழ்ச்சங்கம் அடசாரப்பட்டுவணங்கி அபசாராக்ஷபணம் பெற்றதையும்,

திவ்யப் பிரபந்தங்கள் அடியோடு மறைந்த காலத்தில் நாதமுனிகள் பிரார்த்தனையால் ஷை அர்ச்சா விக்ரக ஸ்வரூபம வாய்திறந்தருளவும், திரும்ப பட்டோலை கொண்டு வெளியிட்டருளியதைப் பாக்களாகக் கூறப் பட்டுள்ளது. அழகிய தகுந்த நான்கு படங்களுடன் கூடியது. மேற்படியாரின் பாணுக்கர் குமாரர் பெரியன் ெவ. நா. ஸ்ரீநிவாஸனால் எடுத்தெழுதப்பட்டு ஸ்ரீ. உ. வே. நல்லான் சக்ரவாத்தி எட்டயபுரம் தமிழாசிரியர், R. ஸ்ரீநிவாசய்யங்கார் ஸ்வாமிகளால் பார்வையிடப் பெற்று வெளியிடப்பட்டது. ராப்பர் விலை ரூ. 2—0—0

மேற்படி காலிகோ 2—6—0

காலிகோ தேவையுள்ளவர்கள். அட்வான்ஸ் ரூபாய் ஒன்று அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

ஸேவார்த்திக ளுபயோகத்துக்குரிய (ஸ்ரீ சட
கோப திவ்ய சரித்திரத்தி லடங்கியுள்ள படங்
கள்) சின்னக் கலியன் வானுமாமலை ராமா
நுஜ ஜீயர் ஸ்வாமி 25-வது பட்டம் 0 2 0

எம்பெருமானார் (உடையவர்) 0 2 0

ஸ்வாமி ஆதிநாதராழ்வார் சந்நிதி வீதி,
ஆழ்வார்திருநகரி 0 2 0

ஸ்வாமி நம்மாழ்வார் யோகாசனத்தில் எழுந்
தருளியிருந்த 16-வது திருநக்ஷத்திரத்தில்
ஸ்ரீமதுரகவியாழ்வார் ஸேவிக்குந்திருக்கோலம் 0 2 0

ஸ்ரீமத் ராமாயணம், பெரியவாச்சான்பிள்ளை திரு
வாய் மலர்ந்தருளிய திவ்ய ப்ரபந்த பாசுரப்படி பிரதி
வாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளால்
வெளியிடப்பட்டதை யாவத்ராளும இலவசமாய்ப்
பெற்றுப் பாராயணம் செய்யும் பொருட்டு திரும்ப
பெரியன். வெ. நா. ஸ்ரீனிவாஸனால் அச்சேறி வெளிவந்
துலவுவது.

ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

ஸேவார்த்திக ளுடையோகத்துக்குரிய (ஸ்ரீ சட கோப திவ்ய சரித்திரத்தி லடங்கியுள்ள படங் கள்) சின்னக் கலியன் வானமாமலை ராமா நுஜ ஜீயர் ஸ்வாமி 25-வது பட்டம் 0 2 (

எம்பெருமானார் (உடையவர்) 0 2 (

ஸ்வாமி ஆதிநாதராழ்வார் சந்நிதி வீதி,

ஆழ்வார்திருநகரி 0 2 (

ஸ்வாமி நம்மாழ்வார் யோகாசனத்தில் எழுந் தருளியிருந்த 16-வது திருநக்ஷத்திரத்தில் ஸ்ரீமதுரகவியாழ்வார் ஸேவிக்குந்திருக்கோலம்0 2 (

ஸ்ரீமத் ராமாயணம், பெரியவாச்சான்பிள்ளை திரு வாய் மலர்ந்தருளிய திவ்ய ப்ரபந்த பாசுரப்படி பிரதி வாதி பயங்கரம் அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளால் வெளியிடப்பட்டதை யாவத்ராளும இலவசமாய்ப் பெற்றுப் பாராயணம் செய்யும் பொருட்டு திரும்ப பெரியன். வெ. நா. ஸ்ரீனிவாஸனால் அச்சேறி வெளிவந் துலவுவது.

ஸ்டாம்பு அனுப்பிப் பெற்றுக்கொள்ளலாம்.

கிடைக்குமிடங்கள்:—

பொரியன். வெ. நா. ஸ்ரீனி
வாஸன்,
திருஞானமுத்திரைப்
பிரசுராலயம்,
ஆழ்வார்திருநகரி.

கிருஷ்ணையர் அவர்க
வேம்பத்தூர் மடம்
தெற்குரதவீதி,
திருநெல்வேலிடவுன்

S. திருமலைஸாமி அய்யங்கார்,
தமிழாசிரியர்,
செண்ட் சேவியர் கலாசாலை,
பாளையங்கோட்டை